கல்வெட்டில் "சித்திரமேழி நல்லூர்க்கு எழுபத்தொன்பது நாட்டு நாட்டோம்" எனக்குறிக்கப்படுவதும் "எழுகரை நாட்டுப் பதினெண் விஷயம்" என வருவது வேளாளர் சபையாகும். சில கல்வெட்டுக் களில் 'அமண்குடிச்சபை' கூறப்பட்டிருக்கின்றது. இது சமணர் சபையாகும். ஆனால் இவை (சமூக—சமுதாயச் சபைகள்) மிகமிகச் சிலமுறைதான் கூடியிருக்கின்றன. சாதி சமூகச் செய்திகளைக் குறிப்பதற்காக! இதனை வைத்துக் கொண்டு "கொங்கு நாட்டு சமுதாய அமைப்பிற்கு நாடு என்றும், இதில் அங்கம் வகிப்பவர் நாட்டார்" என்று மட்டும் முடிவு கட்டிவிட முடியாது.

ஊராட்சி அவைகளே !

குறுப்பு நாட்டு அவையில் "வேளாளரும் வேட்டுவரும்" கலந்து இருந்தனர். பூந்துறை நாட்டு அவையில் வேளாளர் பலருடன் "பாண்டிய வேட்டுவரில் வீரன் புலிக்குத்தி தேவன்" இருந்தான். செட்டியார், கணக்கர், அந்தணர், கட்டுக்கண்ணிகள் (ஊழியர்) முதலிய அனைவரும் இருந்ததைக் கல்வெட்டில் காணுகின்றோம்.[17] இன்னும் சில கல்வெட்டுக்கள்.[18]

"குறுப்புநாட்டு ஊரும் ஊராளிகளும்"
"குறுப்பு நாட்டு நாட்டவரோம்"
"காங்கய நாட்டு நாட்டார் எங்கள் நாட்டில்"

எனக் கூறுகின்றன.

இச்சபைகள் கூடி சமூகச் செய்திகளை மட்டும் கவனிக்க வில்லை. சாத்தனூரில் நாட்டார் தலைவிலை நீக்கிய செய்தியைப் பின்வரும் தொடர்கள் விளக்குகின்றன.

"பூந்துறை நாட்டோம் சாத்தனூர்க்கெங்களில் அமைவு குடுத்த பரிசாவது...அழிபிழை அநியாயம் செய்தாரை வெட்டுதல் குத்துதல் செய்தால் அவனுக்குத் தண்டம் தலைவிலை யில்லையாக"[19]

வெள்ளோடு, திங்களூர், குன்னத்தூர்க் கல்வெட்டில் நாட்டார் ஜப்தி செய்து சிறையிலிட்டிருக்கின்றனர் என்பதனை அறிகின்றோம்.

"மண்கலந் தகர்த்தும் வெண்கலம் எடுத்துக் கொள்ளக் கடவதாக"
"ஓடிப் போகில் தடுத்து மறிச்சுக் கொள்ளுவதாக"

என்ற வரிகள் அதனை நன்கு விளக்குகின்றன.[20] பேரூர்க்கல்வெட் டொன்று நாட்டார் கூடி சில சமூகத்தினருக்கு உரிமை அளித்தமை பற்றிக் கூறுகிறது.[21]

முடிவுரை:-

செல்வாக்கு மிகுந்த சில தலைவர்கள் நாடு முழுவதையும் தங்கள் அதிகாரத்தின் கீழ்கொண்டு வந்திருக்கின்றனர். காலிங்கராயனை "பூந்துறை நாட்டுக்கு நாட்டானாய் வெள்ளோட்டுக் குடியிருப்புக் காரன்" என்று வமிசாவளி கூறுகிறது.[22]

'புறமலை நாடாள்வானேன்' 'புறமலை நாட்டுத் தகடாதிராயன் செய்யபெருமாள்' என்பவர் சில நாட்டுத் தலைவர்கள்.

இன்றும் கொங்குநாட்டு மக்களிடையே ஊராளும் காணியாளர் பெயர்களும், நாட்டுப் பிரிவுகளும் கல்வெட்டில் கூறியபடியே வழக்கில் இருந்து வருகின்றன. சுமார் 1300 ஆண்டுகளாக இந்நாட்டில் நின்று நிலவும் இம்முறை மிக வியக்கத்தக்கதாகும்.

## குறிப்புகள் :

(1) சிலப்பதிகாரம் 30-159.
(2) சுந்தரர் தேவாரம்—கோயில் திருப்பதிகம்
(3) வேள்விக்குடிச் செப்பேடு
(4) 'கொங்கிரண்டும் ஒன்றாக' (144/1909)
'வடகொங்கில் நரையனூர் (112/1920)
'தென் கொங்கில்' (562/1893)
(5) கொங்கு மண்டல சதகம் - ஊர்த்தொகைப் பாடல்; கொங்கு 1—215.
(6) தென்னிந்தியக் கோயில் சாசனங்கள்—1—247.
(7) சுந்தரர் தேவாரம். குரக்குத்தளி.
(8) காளியண்ணக் கவிராயர் பாடல்.
(9) கொங்கு. 1—215.
(10) ஈரோடு பெருமாள் கோயில் வடக்குச் சுவர்க் கல்வெட்டு.
(11) ஈரோடு வரலாற்றுச் சங்கக் குறிப்பு (வெள்ளோடு)
(12) தென்னிந்தியக் கோயில் சாசனங்கள்—3 1-பக் 1068.
(13) தென்னிந்தியக் கோயில் சாசனங்கள்—1-255.
(14) தென்னிந்தியச் சாசனங்கள் 3-212.
(15) தமிழகம்—20.
(16) ஈரோடு வரலாற்றுச் சங்கக் குறிப்பு (குன்னத்தூர்)
(17) நசியனூர் எழுத்துப் பாறைக் காட்டுக் கல்வெட்டு.
(18) வரலாற்றுச் சங்கக்குறிப்பு; (திங்களூர், பட்டாலி) 227/1920
(19) சாத்தனூர்க் கல்வெட்டு.
(20) குன்னத்தூர்க் கல்வெட்டு.
(21) பேரூர் 562/1893
(22) காலிங்கராயர் கைபீது. D. 3044.



திருமால் - செப்புத்திருமேனி

திருப்பாண்டிக் கொடுமுடி